# சிந்தனையும் மின்னொளியும்

ஸ்ரீ அரவிந்தர் அருளியது

ஸ்ரீ அரவிந்தர்





மொழிபெயர்ப்பாசிரியர்

ரி. கோதண்டராமன், எம்.ஏ., பி.எல்.

சென்னை

# சிந்தனையும் மின்னொளியும்

ஸ்ரீ அரவிந்த முனிவர்
அருளியது

பி. கோதண்டராமன், எம்.ஏ., பி.எல்.
அனுமதியுடன் மொழிபெயர்த்தது

ஜார்ஜ் டவுன் :: சென்னை

 [விலை 10 அணா

6-1

# பொருளடக்கம்

முன்னுரை ... .... பக்கம் 5

சூத்திரங்கள் :

குறிக்கோள் .... .... 7

இறைவன் இன்பம் .... .... 29

மனிதன்-ஜீவான்மா .... .... 37

முடிவு .... .... .... 45

தளை .... .... .... 53

சிந்தனையும் மின்னொளியும் .... .... 73

பொருள் விளக்கம் .... .... 95

6-1

## முன்னுரை

இச் சிறு நூலின்கண், ஸ்ரீ அரவிந்த முனிவர், தமது உயர் சிந்தனையிலும் ஆத்மானுபவத்திலும் மின்னொளி போன்று உதித்த சீரிய கருத்துக்களைப் பொன்னே போன்ற எழுத்துக்களால் பொறித்துள்ளார். உலகு, உயிர், இறைவன் ஆகியவற்றின் தத்துவஞானமெல்லாமே இங்கு சாரமாகப் பிழியப்பட்டிருக்கிறது. ஆசிரியரின் கருத்துக்கள் பலவகைப் பொருளும் செறிந்து விளங்கும் சூத்திரங்களாகவே விளங்குவன. தமிழ்ப் பெருமக்களின் நலங்கருதி இச்சூத்திரங்களை ஈண்டு மொழி பெயர்த்திருக்கிறேன்.

மொழிபெயர்ப்பாசிரியன்.

புலனறிவு, மன அறிவு ஆகியவை களுக்கு அப்பால் செல்லவேண்டும். அப்போதே, நமக்கு ஞானம் கைகூடும். பகுத்தறிவு பயன் பட்டது; இன்று அதுவே நமக்குத் தடையாக நிற்கின்றது.

மன உறுதிக்கு அப்பால் செல்ல வேண்டும். அப்போதே, நமக்கு வலிமை உண்டாகும். முயற்சி உதவியாக இருந்தது; இன்று அதுவே தடை செய்கிறது.

சுக போகங்களுக்கு அப்பால் செல்ல வேண்டும். அப்போதே, நாம் இன்பம் அடைவோம். விருப்பம் உதவியது; இன்று அதுவே தடை.

தனித்தன்மையைத் தாண்டிச் செல்லவேண்டும். அப்போதே, நாம் உண்மையான ஜீவான்மாக்கள் ஆவோம். யான், எனது என்னும் அகந்தை உதவியாக இருந்தது; இன்று அதுவே தடையாக நிற்கின்றது.

மானிடத் தன்மையைக் கடந்து செல்லவேண்டும். அப்போதே, நாம் 'மனு புத்திரர்' ஆவோம். மிருகத்தன்மை பயன்பட்டது; இன்று அதுவே தடை.

பகுத்தறிவை, ஒரு முறைக்குள் கொண்டுவரப்பட்ட அந்தர்ஞானமாக உருமாறும்படி செய். உனது எல்லாம் ஒளிமயமாகட்டும். இதுவே உனது குறிக்கோள்.

ழுயற்சியை, சமனுகவும், சருவ சுவாதீனமாகவும் செல்லும் ஆன்ம சக்தியின் ஒரு பெருக்காக உருமாற்று. உனது எல்லாம் சித்-சக்தி மயமாகட்டும். இதுவே உனது குறிக்கோள்.

சுகானுபவத்தை, ஒரே நிதான மான, யாதொரு நோக்கமு மில்லாத ஆனந்தப் பரவசமாக உருமாற்று. உனது எல்லாம் ஆனந்த மயமாகட்டும். இதுவே உனது குறிக்கோள்.

பிரிந்து நிற்கும் தனி ஜீவனை விசுவ மய புருடனாக உருமாற்று. உனது எல்லாம் தெய்விகம் பொருந்தியதாகட்டும். இதுவே உனது குறிக்கோள்.

பசுவை (மிருகப் பிராயமா யிருப்பதை) பசுபதியாக்கு. உனது எல்லாம் கண்ணன் மயமாகட்டும். இதுவே உனது குறி.

நான் இன்று செய்ய முடியாம லிருப்பது எதுவோ, அதுவே நான் இனி செய்யப்போவதன் சூசகமாகும். அசாத்தியம் என்னும் உணர்ச்சியே எல்லா சாத்தியங்களுக்கும் ஆரம்ப மாகும். இந்த அநித்தியமான பிரபஞ்சம் அசத்தியாபாசமாகவும்* அசாத்தியமாகவும் இருப்பதால்தான், நித்தியன் தன்னிட மிருந்தே இதைப் படைத்தான்.

அசாத்தியம் என்பது என்ன? இன்னும் சித்தியாகாத, மகத்தான சாத்தியங்களின் தொகுதியே அது. முன்னேற்றத்தின் ஓர் படியையும், இன்னும் முடிவடையாத ஓர் பிரயாணத்தையும் அது மறைக்கின்றது.

மக்களினம் முன்னேற வேண்டுமென நீ விரும்புவாயாகில், மனத்தில் ஏற்கெனவே பதிந்துள்ள கருத்துக்களையெல்லாம் களைந்துவிடு. இவ்வண்ணம் கிளறிவிடப்பட்ட சிந்தனை விழிப்புற்றுச் சிருஷ்டிக்கும் ஆற்றலைப் பெறுகின்றது. இல்லாவிடின், அது இயந்திரம் போன்று, திரும்பத் திரும்ப ஒரே மாதிரியாகச் சுழன்று, அதுவே சரியான கருமமெனத் தவருகக் கொள்ளுகின்றது.

தூன் அறிவாகிய அச்சின்மீது சுற்று வதொன்றே மானிட ஜீவனுக்குரிய இயக்கமன்று. பூமி தன்னையே சுற்றி வருவதுடன் சூரியனையும் வலம் வருவதைப் போலவே, ஜீவனும் இறைவனின் குன்றாத ஜோதியை வலஞ் செய்ய வேண்டும்.

முதலில், நீ யார் என்பதை உள்ளுக்குள்ளேயே உணர். பின்னர் சிந்தனை செய். பிறகு செயலாற்று. ஜீவனுள்ள சிந்தனையெல்லாம், ஆயத்தமாகி வரும் ஓர் உலகேயாகும். உண்மையான செயல் எல்லாம், புறத்தில் வெளிப்பாடு அடையும் சிந்தனையே. தன்னுணர்வு கொண்ட இறைவனிடம் ஓர் எண்ணம் விளையாட ஆரம்பித்ததன் காரணமாகவே ஜட உலகு இருக்கலாயிற்று.

சிந்தனையானது இருக்கைக்கு அவசிய மன்று; அதன் காரணமு மன்று. ஆனல், அது ஆக்கத்திற்குரிய ஓர் கருவியாகும். நான் என்னிடம் எதைக் காண்கிறேனே, அதுவாகவே ஆகிறேன்.

சிந்தனை சூசிப்பதை யெல்லாம் நான் செய்ய வல்லேன். சிந்தனை என்னிடம் எதை யெல்லாம் வெளிப்படுத்துகின்றதோ, அது வெல்லாமாக நான் ஆகக்கூடும். மனிதன் தன்னிடம் இவ்விதமான அசைக்க முடியாத நம்பிக்கை வைக்கவேண்டும். ஏனெனில், இறைவனே அவனுக்குள் வதிகிறான்.



மனிதன் ஏற்கெனவே செய்துள்ள வற்றைத் திரும்பத் திரும்பச் செய்து கொண்டு போவது நமது வேலையல்ல. புது அனுபவங்களையும், இதுவரையில் கனவிலும் கருதியிராத ஆட்சிகளையும் நாம் அடைதல் வேண்டும். காலமும், உயிரும், உலகமும் நாம் செயல் புரிவதற் குரிய களங்களாக நமக்கு அளிக்கப்பட் டுள்ளன. அகக் காட்சியும், நம்பிக்கை யும், படைக்கும் ஆற்றல் வாய்ந்த கற்ப னையும் நம்மை உந்தும் தூண்டுகோல்க ளாகும். மனத் திட்பமும், சிந்தனையும், உழைப்பும் நமது மிகவும் சக்திவாய்ந்த சாதனங்களாகும்.

நாம் இன்னும் புதிதாகப் பெற வேண்டியவை யாவை? முதலாவது, அன்பு: ஏனெனில், பகைமையும் சுய திருப்தியுமே இது வரையில் நாம் சாதித்துள்ளவை யெல்லாம். இரண்டாவது, ஞானம்: ஏனெனில், இது வரையில் பிழையே புரிந்துள்ளோம்; மனத்தால் கண்டும் பாவித்துமே யுள்ளோம். மூன்ருவது, பேரின்பம்: ஏனெனில், இது வரையில் இன்ப துன்பங்களையே அடைந்துள்ளோம்; அல்லது அலட்சியமாகவே இருந்திருக்கிறோம். நான்காவது, வலிமை: ஏனெனில், இது வரையில், பலவீனம், முயற்சி, தோல்வியுற்ற வெற்றி ஆகியவற்றை மட்டுமே அடைந்துள்ளோம். ஐந்தாவது, வாழ்வு: ஏனெனில், இது வரையில் நாம் பிறந்தும், வளர்ந்தும், இறந்துமே வந்திருக்கிறோம். ஆருவது, ஒற்றுமை: ஏனெனில், இது வரையில் நாம் கூட்டமாகக் கூடியும், போர் செய்துமே வந்திருக்கிறோம்.

ஓரே சொல்லில், நாம் தெய்வத் தன்மை அடைதல் வேண்டும்; தெய்வ வடிவில் நம்மைத் திருத்தி யமைத்துக் கொள்ள வேண்டும்.

இறைவன், நமது உருப்படியான வாழ்க்கையின் காட்சி உண்மையை நிரந்தரமாக மறுக்கும் நிர்க்குணனையும் நிர்த்தொந்தனையும் மட்டுமே இருப்பின், அழிவு அல்லது நாசமே ஜடப் பொருளின் சரியான முடிவாகும். ஆனால், ஆண்டவனின் அன்பையும், இன்பத்தையும், தன்னுணர்வையும், நாம் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டும்.

பிரபஞ்சமானது, எண்கள் விதிகள் என்னும் சில கருத்துக்களின் தொடர்புகளைக் கண்டுபிடிப்பதற்குரிய ஒரு கணித சூத்திரமல்ல; இறுதியில் ஒரு சுன்னம் அல்லது சூனியத்தில் முடிவடைவதுமல்ல; சக்திகளின் ஒரு குறித்த சமன்பாட்டைத் தன்னுள் கொண்ட ஒரு பௌதிக இயக்கமுமல்ல. அது தன்னையே காதலிக்கும் ஒருவனின் இன்பப் பெருக்காகும்; ஒரு குழந்தையின் விளையாட்டாகும்; முடிவில்லாமல் சிருஷ்டிக்கும் தன் ஆற்றலிலிருந்து தோன்றும் பரவசத்தினால் உன்மத்தனாகும் ஓர் கவியின் முடிவற்ற சுயப் பெருக்காகும்.

பிரபஞ்சத்தை எண்களின் ஓர் தொகை எனக்கொள்ளும் ஓர் கணித நிபுணன் என, நாம் பரமனைக் கூற லாம். அல்லது, சக்திகளின் சமநிறை, நியமங்கள் ஆகியவற்றின் தொடர்பு களைப் பற்றிய பிரச்னையைச் சோதித்து முடிவு கட்டும் ஓர் சிந்தனையாளனாகவும் அவனைச் சொல்லலாம். ஆனால், அவனை ஓர் காதலனாகவும், பிரபஞ்சமெங்கும் வியாபித்தும் தனித்துமுள்ள இசைவு களை (பொருத்தங்களை) இசைக்குமோர் இசைவள்ளலாகவும், குழந்தையாகவும், கவியாகவுங்கூடக் கூறவேண்டும். சிந் தனையின் அம்சம் மட்டும் போதாது; இன்பத்தின் அம்சத்தையும் முற்றிலும் கிரகிக்க வேண்டும். பாவம் (எண்ணம்), சக்தி, இருக்கை, தத்துவம் ஆகிய இவை யாவும் இறைவனின் இன்ப வாடையால் நிரப்பப்பட்டா லொழிய, உயிரற்ற வெற்றுருவங்களாகவே இருக் கும்.

இப் பொருள்கள்* வடிவங்களாகும். ஆனால், அகிலமும் ஓர் வடிவமே. நிர்த்தொந்தமான கருத்துக்கள், இறைவன் உண்மைகளின் தூய்மையான பாவத்தை நமக்களிக்கின்றன. வடிவங்கள், அவற்றின் உயிர் ததும்பும் உண்மையை நமக்களிக்கின்றன. பாவம் (எண்ணம்) சக்தியைத் தழுவி உலகங்களை ஈன்றது. ஆனால், இறைவனின் இன்பமே அந்த பாவம் அல்லது எண்ணத்தை உண்டு பண்ணியது. அகண்டன் அளப்பரியதோர் இன்பத்தைக் கருக்கொண்டதன் பயனாக, உலகங்களும் பிரபஞ்சங்களும் தோன்றலாயின.

---

* பாவம், சக்தி, இருக்கை, தத்துவம் ஆகியவை.

இறைவன் - உணர்வும் இன்பமும் முதல் தாய் தந்தையாம். மேலும், அவையே இறுதியான பரநிலைகள். இடையில் ஏற்பட்ட உணர்வின் மயக்கம் அல்லது உறக்கமே, உணர்வற்ற நிலையென்பது. துன்பமும் தன்னழிவும் யாவை? தன்னை வேறு இடத்திலோ, வேறு விதமாகவோ காணும் பொருட்டு, தன்னிட மிருந்தே தப்பி யோடும் இறையின்பமே அவை.

இறையின்பம், கால வரையறைக்கு உட்பட்டதன்று. அது ஆதி அந்த மற்றது. இறைவன், பொருள்களின் ஓர் உருவிலிருந்து வெளிவருவதானது, மற்று மோர் உருவத்தில் புகுதற்கேயாகும்.

இறைவன்தான் யார்? சநாதன மாக உள்ள ஒரு சோலையில், அனுதி யான ஒரு விளையாட்டை ஆடும் ஓர் நித்திய பாலகனே அவன்.

இறைவன், இயற்கைபால் சாய்ந்து நோக்காமலிருக்க முடியாது. மானிடனும், இறைவன்பால் ஆர்வங்கொள்ளாமல் இருக்க முடியாது. முடிவுள்ள பொருளுக்கும் முடிவற்ற பொருளுக்கும் உள்ள அனாதிகாலமான தொடர்பாகும் இது. ஒன்று மற்றொன்றினின்று பிரிந்து செல்வது போலக் காணப்படுவதெல்லாம், மீண்டும் மிக அந்தரங்கமாகச் சேருவதன் பொருட்டே யாகும்.

உலக இயற்கை, தனது போக்தஞகிய இறைவனை நோக்கி ஒரு பெரிய பாய்ச்சலாகத் தாண்டுவதன் பொருட்டு, மனிதனிடம் மீண்டும் சுய உணர்வுபெறுகிருள். இந்த போக்தனை அவள் தன்னையும் அறியாமல் தன்னுள்ளேயே பெற்றிருக்கிருள். உயிரும் உணர்ச்சியும் அவனைப் பெற்றிருந்தும் மறுக்கின்றன; மறுத்துக்கொண்டே அவனை அடையவும் நாடுகின்றன. உலக இயற்கை, தன்னைத் தானே அறிந்து கொள்ளாததனுல்தான், இறைவனை அறிந்து கொள்ளாமலிருக்கிருள். அவள் தன்னைத் தான் அறியும்போது, இறைவனின் கலப்பற்ற இன்பத்தையும் அறிவாள்.

ஒருமையில் அமிழ்ந்து தன்னை இழந்து விடுவதல்ல, ஒருமையில் நின்று எல்லாவற்றையும் உடைமைப் படுத்திக் கொள்ளுவதே ரகசியமாகும். இறையும் மானிடமும், உலகும் உலகுக்கு அப்பாலுள்ளதும், ஒன்றை யொன்று அறியும்போது ஒன்று படுகின்றன. அறியாமை துன்பத்திற்குக் காரணமா யிருப்பதைப் போல, அவற்றின் பிரிவே அவ் அறியாமைக்குக் காரணமாக நிற்கின்றது.

மனிதன் முதலில் ஏதோ ஒன்றைக் குருட்டுத்தனமாக நாடுகிறான். தான் நாடுவது தன் பரமாத்மாவையே என்பதை அவன் அறிவதில்லை. ஏனெனில், ஜட இயற்கையின் இருளினின்றே அவன் ஆரம்பிக்கிறான். அவன் பார்க்க ஆரம்பிக்கும் போதுங்கூட, தன்னிடம் மேன்மேலும் பெருகிவரும் ஒளியினால், அவன் கண்கள் நீண்ட காலம் கூச்சமடைகின்றன. அவனுடைய தேட்டத்திற்கு ஒப்ப, இறைவனும் தெளிவின்றிப் பதிலளிக்கிறான். ஒரு சிறு குழந்தை அன்னையைத் தன் கரங்களால் தடவிப் பார்ப்பதைப் போல, இறைவனும் பார்வையிழந்த மனிதனை நாடி இன்புறுகிறான்.

இறைவனும் இயற்கையும், ஒருவ ரோடொருவர் விளையாடிக் காதல் புரியும் சிறுவன் சிறுமியைப் போலவே உள்ளனர். ஒருவரை யொருவர் ஒரு சிறிது கண்டுவிட்டால், ஒருவர், மற்ெருருவரிடமிருந்து பிரிந்து ஓடி மறைந்து கொள்ளுகின்றனர். இவ்விதம் செய்வதெல்லாம், ஒருவரை யொருவர் நாடி, பின் தொடர்ந்து, கடைசியில் கைப்பற்றுவதற்கே யாகும்.

மனிதன் யார்? போராட்டம், பிடிவாதம், பலாத்காரம், எதிர்பாராத வினை ஆகியவற்றின் மூலமாக இயற்கையை உடைமைப் படுத்திக்கொள்ளும் பொருட்டு, அவளிடமிருந்து தனது உண்மையான சொரூபத்தை மறைத்துக்கொள்ளும் இறைவனே மனிதன். இறைவன் யார்? மானிட ஜீவனில் அமைந்துள்ள தனது தனித்தன்மையினின்று தனது விசுவரூபத்தையும் பரநிலையையும் மறைத்துக்கொள்ளும் மனிதனே இறைவன்.

விலங்கு யாது ? உரோமம் நிறைந்த தோலில் மறைந்துள்ளவனும், நான்கு கால்களை யுடையவனுமாகிய மானிடனே அது. புழு யாது? நெளிந்தும் ஊர்ந்தும் சென்று, தனக்குரிய மானிட நிலையை நோக்கிப் பரிணும மடைந்து வரும் மானிடனே அது. பண்படாத ஜட உருவங்கள் யாவை? அவையும், உருப் பெருத உடல்களையுடைய மானிடனே. எல்லாப் பொருள்களும் ஜீவான்மாவாகிய மானிடனே. மானிடன் எனில் நாம் கொள்ளும் பொருள் யாது? படைக்கப் படாததும், அழிவற்றதும், தன் சொந்த அம்சங்களினின்றுமே ஆக்கப்பட்ட ஒரு மனத்திலும் உடலிலும் குடிகொண்டுள்ளதுமான ஓர் ஆன்மாவே அவன்.

மனிதனும் இறைவனும் ஒன்று சேருவது என்றால் என்ன? இறைவன் மனிதனுக்குள் ஊடுருவி நுழையவேண்டும்; மனிதனும் இறைவனுக்குள் தன்னை அமிழ்த்திக்கொள்ள வேண்டும். இதுவே என்றும் அதன் பொருளாக இருத்தல் வேண்டும்.

ஆனால், அந்த அமிழ்ச்சி அழிவின் தன்மையது அல்ல. அழிவே, இந்தத் தேட்டம், காதல் வெறி, துன்பம், பரவசம் ஆகியவற்றின் இறுதியான முடிவு ஆகாது. விளையாட்டின் முடிவு அழிவேயாயின், அவ் விளையாட்டு என்றுமே ஆரம்பிக்கப்பட்டிராது.

இன்பமே ரகசியம். தூய்மையான இன்பத்தை அறிவாயாகில், இறைவனை யும் அறிவாய்.

இவ் விஷயங்கள் எல்லாவற்றினுடையவும் ஆரம்பந்தான் என்ன? உள்ள* ஒருவன் வெறும் இன்பத்தின் பொருட்டே தன்னைப் பெருக்கிக் கொண்டான்; எண்ணற்ற, கோடிக்கணக்கான உருவங்களில் தன்னையே காணும் பொருட்டு, அவை யாவற்றினுள்ளும் நுழைந்தான். இதுவே ஆரம்பம்.

---

* நிலைபெற்றுள்ள.

நடுவு என்ன? பன்மையில் ஒருமையை அடையப் பாடுபடும் பிரிவு; பல திறப்பட்ட ஒளியின் பிரவாகத்தை நோக்கிப் பிரயாசையுடன் செல்லும் அறியாமை; கற்பனைக்கும் எட்டாத ஒரு பரவசத்தின் ஸ்பரிசத்தை அடையும் பொருட்டு வேதனைப்படும் துன்பம் - ஆகிய இவையே. இவை யாவும் இருள் செறிந்த உருவங்கள், முறை பிறழ்ந்த துடிப்புக்கள்.

இவை யாவற்றினுடையவும் முடிவு என்ன? தேன் தன்னை மட்டுமன்றி, தன் துளிகள் ஒவ்வொன்றையும் ஒருங்கே சுவைக்கக் கூடுமானாலும், அத் துளிகள் ஒவ்வொன்றும் தன்னை மட்டு மன்றி, பிற துளிகள் ஒவ்வொன்றையும் தேன் கூடு முழுவதையும் சுவைக்கக் கூடுமானாலும், எவ்விதம் இருக்குமோ, அவ்விதமாகவே, இறைவன், ஜீவான்மா, பிரபஞ்சம் ஆகிய இவை ஒவ்வொன்றும், தன்னை மட்டுமன்றி, மற்றவைகளையும் ஒருங்கே அனுபவித்து சம்பூரணமடை வதே முடிவாக இருத்தல் வேண்டும்.

அன்பே மூல சுவரம்; உவகையே இசை; சக்தியே ராகம்; ஞானமே இசைக் கருவியை மீட்டி வாசிப்பவன்; அகிலமும் ஆன அகண்டனே சாகித்ய கர்த்தாவும் ரசிகனும். ஆரம்பகால அப சுவரங்களைத்தாம் நாம் அறிவோம். பின் வரப்போகும் இசைவும் பொருத்த மும் எவ்வளவு உன்னதமாக இருக் குமோ, அவ்வளவு பயங்கரமாக இருக் கின்றன இந்த ஆரம்ப கால அபசுவரங் கள். ஆயினும், தெய்விகப் பேரின்பங் களின் அனுசரணத்தை நாம் கட்டாய மாக அடைவோம்.

உலகிலுள்ள ஜீவராசிகள் யாவும் விடுதலையைப் பெரிதும் விழைந்து நிற்கின்றன. ஆயினும், ஒவ்வோர் உயிரும், தன்னைப் பிணைக்கும் தளைகளின்மீது மோகங் கொள்ளுகின்றது. இதுவே, நமது இயல்பின் முதல் அசத்தியாபாசமும் அவிழ்க்க முடியாத முடிச்சுமாகும்.

மனிதன் தன் பிறப்பின் தளை களின்மீது காதல் கொள்ளுகிருன்; ஆகவே, அவற்றுடன் தோழமை பூணும் இறப்பின் தளைகளிலும் அகப்பட்டுக் கொள்ளுகிருன். இவ்வண்ணம் கட்டுண்டு, அவன் தன் ஆத்ம சுதந்திரத்தையும் ஆத்ம சித்தியினின்று விளையும் ஆட்சிகளையும் நாடி நிற்கிருன்.

மனிதன் வலிமையை விரும்புகிறான். ஆதலின், பலவீனத்திற்கு ஆட்படுகிறான். ஏனெனில், உலகமானது, ஒன்றையொன்று நெருங்கியும், இடைவிடாமல் ஒன்றன்மீது ஒன்று வீசி எறிந்துகொண்டும் உள்ள சக்தியின் அலைகள் கொண்ட ஒரு கடலாகும். ஓர் அலையின் சிகையின்மீது ஏற விரும்புகிறவன், நூற்றுக் கணக்கான அலைகளின் அதிர்ச்சியால் மூர்ச்சையடையவேண்டியவனாகிறான்.

மனிதன் சுகத்தை விரும்புகிறன். ஆதலின், துன்பம் துயரங்களின் நுகத் தடியின்கீழ் அகப்பட்டுக்கொண்டு அல் லற்படவேண்டியவனுகிறன். ஏனெனில், விடுதலையும் விராகமும் அடைந் தோர்க்கே கலப்பற்ற இன்பம் உரித்தா னது. ஆனல், சாதாரண மனிதனைப் பொறுத்த மட்டில், துயரமும் பிரயாசை யுமே சுகத்தைப் பின்தொடர்ந்து வரு கின்றன.

மனிதன் அமைதியின் பொருட்டு ஏங்குகிறான். ஆயினும், சஞ்சலிக்கும் மனத்தினுடையவும், வேதனைப்படும் உள்ளத்தினுடையவும் அனுபவங்களை யும் அவன் விழைகிறான். சுகபோகமே அவனுக்கு மனக்கிளர்ச்சி தருகிறது. அமைதி அவனுக்குத் தாமத குணம் வாய்ந்ததாக இருப்பதோடு சலிப்பும் தட்டுகின்றது.

மனிதன் தனது பூதவுடலின் பந்தங்களை விரும்புகிருன். ஆயினும், வரம்பற்ற மனத்தினுடையவும் அழிவற்ற ஆன்மாவினுடையவும் சுதந்திரத்தையும் அடைய விரும்புகிருன். அவனிடமுள்ள ஏதோ ஒன்று, இவைகள்பால் அதிசயமாக ஈர்க்கப்படுகின்றது. அவனுடைய மனேமய ஜீவனுக்கு, இவையே வாழ்க்கைக்கு அழகு தரும் விஷயங்களாகும். அவனுடைய சுவையும், ஆராயும் இயல்பும் அமுதத்தையன்றி, விஷத்தையும் விழைகின்றன.

இவ் விஷயங்களுக்கெல்லாம் ஒரு பொருள் உண்டு. இந்த எதிரிடைகளுக் கெல்லாம் ஒரு விமோசன முண்டு. இயற்கை தனது சேர்க்கைகளின் விஷயமாகக் காட்டும் பைத்தியக்காரத் தனத்திலும் ஒரு முறையுண்டு. சிக்கறுப் பதற்கு மிகவும் கடினமான அவளு டைய முடிச்சுகளுக்கும் ஓர் அவிழ்ப்பு உண்டு.

இயற்கை, வாழ்க்கைக்கு இடைவிடாமல் ஒரு கேள்வி போடுகிறாள். அதுவே மரணம். அதன் மூலமாக, வாழ்க்கை இன்னும் தன் உண்மை நிலையை அடையவில்லை என்பதை அதற்கு நினைப்பூட்டுகிறாள். மரணம் வாழ்க்கையை முற்றுகை போடாவிடில், மனிதன் பரிபக்குவமடையாத வாழ்க்கையின் அமைப்பிலேயே என்றும் பிணைக்கப்பட்டிருப்பான். மரணம் பின் தொடர்ந்து வருவதால்தான், பூரண வாழ்க்கையைப் பற்றிய எண்ணம் மனத்தினில் உதித்து, அவன் அதற்குரிய சாதனங்களையும், அதன் சாத்தியத்தையும் தேடுகிறான்.

பலவீனமானது, நாம் பெருமையடித்துக் கொள்ளும் பலத்திற்கும் ஆற்றல்களுக்கும் அதே கேள்வியைப் போட்டு அதே விதமாகச் சோதிக்கிறது. வலிமை, வாழ்க்கையின் விளையாட்டாகும்; அது வாழ்க்கையின் அளவைக் காட்டி, அதன் வெளிப்பாட்டின் மதிப்பைக் கண்டுபிடிக்கின்றது. பலவீனம் மரணத்தின் விளையாட்டாகும்; அது வாழ்க்கையின் இயக்கங்களைப் பின் தொடர்ந்து, வாழ்க்கை அடைந்துள்ள ஆற்றலின் வரையறையை வற்புறுத்துகின்றது.

உயிர் அனுபவிக்கும் சுகமானது, இறைவனது உண்மையான இன்பத்தின் ஓர் அற்பக் குறிப்பேயாகும். இதை இயற்கை துன்பம் துயரங்களின் மூலமாக அவ்வுயிருக்கும் நினைப்பூட்டுகின்றாள். வாழ்க்கையில் நாம் அனுபவிக்கும் ஒவ்வொரு துன்பத்திலும், வேதனையிலும், சுவாலை விட்டெரியும் இன்பப் பரவசத்தின் ரகசியம் உள்து. அந்தச் சுவாலையுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், நமது மிகப் பெரிய சுகங்களும் மங்கலாக எரியும் சிற்றொளிகளாகவே இருக்கும். வாழ்க்கையில் வரும் கடுஞ் சோதனைகளையும், துயரங்களையும், பயங்கர அனுபவங்களையும், தளர்ச்சியுற்ற நம் மனம் அருவருத்து வெறுக்கின்றது. ஆனால், அவற்றைத் தீரமாக அனுபவிக்கும் உயிரையே இந்த ரகசியம் தன்பால் ஈர்க்கின்றது.

ஒரு புறம், செயல் புரியும் நமது ஜீவனும் அதன் சாதனங்களும் அமைதி யிழந்து வெகு சீக்கிரம் சோர்ந்து விடு வதைக் காண்கிறோம். இதன் மூலமாக அமைதியே நமது உண்மையான அடிப் படை என்பதையும், பரபரப்பும் மனக் கிளர்ச்சியும் உயிரைப் பீடிக்கும் வியா தியே என்பதையும் இயற்கை குறிப் பாகக் காட்டுகிறாள். மற்றொரு புறம், செயலற்றும் சலிப்புற்றும் உள்ள ஒரு வெற்று அமைதியைக் காண்கிறோம். இதன் மூலமாக, அமைதியின் உறுதி யான அஸ்திவாரத்தின் மீதே நாம் செயல் புரியவேண்டும் என்பதே தனது விருப்பமெனஅவள் குறிப்பாகக் காட்டு கிறாள். இறைவன் சதா காலமும் திரு விளையாடல் புரிந்து வருகிறான். ஆயி னும், அதனால் அவன் பாதிக்கப்படுவ தில்லை.

உடல் ஓர் அச்சைப் போன்றது. ஆகவே, வரம்புகளுடையது. உயிரும் மனமும் இவ் வரம்புகளுக்குள் தங்களைப் பொழிந்து, இவற்றை உடைத்து விரிவாக்கி, மீண்டும் மீண்டும் புதுக்கியமைக்க வேண்டியதாக இருக்கிறது. வரம்புள்ள இவ்வுடலுக்கும் வரம்பற்ற தங்களுக்கும் ஒப்பை யுண்டாக்கும் ஒரு விதியைக் காணும் வரையிலும் இவ்வண்ணம் செய்யவேண்டியதாக இருக்கிறது.

சுதந்திரமே, வரையறையற்ற ஒருமையுடன் திகழும் பரமாத்மாவின் தருமமாகும். அகில இயற்கையின் மீது ரகசியமாக ஆட்சிசெலுத்துவதும் அதுவே. பன்மையில், தனது அம்சங்களேயான இதர ஜீவான்மாக்களின் விளையாட்டுக்குப் பயன்படும் பொருட்டுத் தன்னைத் தானே சுயேச்சையுடன் ஈயும் இறைவனின் பராதீனமே அன்பின் தருமமாக விளங்கும்.

சுதந்திரமானது பந்தங்களுக்குக் கட்டுப்பட்டுத் தொழிற்பட நேரிடும் போதும், பராதீனமானது அன்பின் தருமமா யிருப்பதற்குப் பதிலாக, பலாத்காரத்தின் தருமமாகும் போதுமே, பொருள்களின் உண்மையான தன்மை விரூபமடைந்து, வாழ்க்கை விஷயமான உயிரின் விவகாரங்களில் அபத்தமே ஆட்சி செலுத்தலாகிறது.

இயற்கை, இந்த விரூபத்திலிருந்து ஆரம்பித்து, இதனின்றும் ஏற்படக் கூடிய எல்லாச் சேர்க்கைகளுடனும் திரு விளையாடல்கள் புரிந்து, பின்னரே இவ் விரூபத்தைச் சரிப்படுத்துகிருள். பிறகு, இச் சேர்க்கைகளின் சாராம்சங்களை யெல்லாம் ஒருங்கே திரட்டி, அன்பும் சுதந்திரமும் கொண்ட, புதிய வள மான ஓர் இசைவை உண்டாக்குகிருள்.

சுதந்திரமானது வரம்புகளற்ற ஓர் ஒருமையினின்று வருவது. அவ்வொருமையே நமது உண்மையான ஜீவன். அந்த ஒருமையின் சாராம்சத்தை நாம் நமக்குள்ளேயே பெறலாம். மற்றெல்லாவற்றினுடனும் ஒன்றுபட்டு அதன் விளையாட்டை நாம் அனுபவிக்கலாம். இந்த இருவித அனுபவங்களுமே, இயற்கையின் சலனங்களுக்குள்ளேயும் ஒளிரும் பரமனின் முழுக் கருத்தாகும். நமக்குள்ளேயே அகண்ட ஒற்றுமையை அடைந்து, பின்னர் உலகுக்கு நம்மை ஈவதே முழுச் சுதந்திரமும் சம்பூரண ஆதிபத்தியமுமாகும்.

அந்த மில்லாத அந்த அகண்ட நிலையை அடைந்து விடுவோமாயின், நாம் மரணத்தினின்று விடுதலை யடைகிறோம்; ஏனெனில், அப்போது, வாழ்க்கையானது நமது சாகா நிலையின் ஒரு விளையாட்டாகிறது. நாம் பலவீனத்தினின்று விடுதலை யடைகிறோம்; ஏனெனில், தனது பல்லாயிரக்கணக்கான அலைகளின் அதிர்ச்சியை இன்புடன் அனுபவிக்கும் முழுக் கடல் போல ஆகிறோம். துன்பம் துயரங்களினின்று விடுதலை யடைகிறோம்; ஏனெனில், நமது ஜீவனுடன் தொடர்புறும் யாவற்றுடனும் நாம் இசைவுடன் பொருந்தி நிற்கவும், எல்லாப் பொருள்களிலும் இறைவன் இன்பத்தின் வினையையும் எதிர் வினையையும் காணவும் கற்றுக் கொள்ளுகிறோம்.

நாம் பந்தங்களினின்று விடுதலை யடைகிறோம். ஏனெனில், உடலானது அகண்ட மனத்தின் விளையாட்டுப் பொருளாகி, அழிவற்ற ஆன்மாவின் சித்தத்திற்குக் கீழ்ப்படியக் கற்றுக் கொள்ளுகிறது. நாம் மனம், இதயம் ஆகியவற்றின் கிளர்ச்சிகளினின்று விடுதலை யடைகிறோம்; ஆயினும், செயலின்றிச் சும்மாவிருக்க நாம் கட்டுப்படுவதில்லை.

சாகாமை, ஒருமை, சுதந்திரம் இவை யாவும் நம்முள்ளேயே உள்ளன. இவற்றை நாம் கண்டுபிடித்துக்கொள் ளுவ தொன்றே பாக்கி. ஆனல், அன்பி னின்று விளையும் ஆனந்தத்தின் பொரு ட்டு, நம்மிடம் உறையும் இறைவன் இன் னும் பன்மையாகவே இருப்பான்.

தன்னை ஒரு கடவுள் காத்தளிக்கிறான் என நம்புவதும், கடவுளின் கரங்களில் தான் ஒரு கருவியே எனக் கொள்ளுவதும், அகந்தையின்பாற் பட்டன எனச் சிலர் கருதுவர். ஆனால், ஒவ்வொருவனுக்கும் அவனைக் காத்தளிக்கும் ஒரு கடவுளுண்டு என்பதையும், கடவுள் தொழிலாளியின் மண்வெட்டியைப் பயன்படுத்துவதைப் போலவே பச்சைக் குழந்தையின் வாயில் மழலை பேசுவதையும் நான் காண்கிறேன்.

சேதமடைந்த கப்பலிலுள்ளோர் அனைவருமே மூழ்கிவிட, என்னை மட்டும் காப்பாற்றிக் கரை சேர்ப்பவன் மட்டும் காத்தளிக்கும் கடவுளல்ல; அனைவருமே காப்பாற்றப்பட, நான் பிடித்துள்ள கடைசிப் பலகையையும் என்னிடமிருந்து பிடுங்கி, என்னை மட்டும் கடலில் மூழ்கடிப்பவனும் காத்தளிக்கும் கடவுளே.

சில சமயங்களில், வெற்றியின் மகிழ்ச்சியானது, போராட்டம், துன்பங்கள் ஆகியவற்றின் கவர்ச்சியைவிடக் குறைவாக இருக்கும். ஆயினும், சிலுவையல்ல, வெற்றி வாகையே, வெல்லும் மானிடனின் குறிக்கோளாக இருத்தல் வேண்டும்.

மெய்ஞ்ஞான நாட்டங் கொள்ளாத உயிர்கள் இறைவனின் தோல்விகளே. ஆனல், இயற்கை மட்டும் திருப்தி யடைந்து அவைகளைப் பெருக்கவே விரும்புகிருள். ஏனெனில், அவையே அவளது ஆதிபத்தியத்தை நிலைநிறுத்தி நீடிக்கச் செய்கின்றன.

ஏழைகள், அறிவிலிகள், இழிகுலத்தவர்கள், விநய மற்றவர்கள் ஆகியோர் பாமரர் ஆகார். அற்ப விஷயங்களில் திருப்தி கொள்ளும் சாமானிய மாக்கள் அனைவருமே பாமரர் ஆவர்.

மக்களைக் கைதூக்கிவிடு; ஆனால், அவர்கள் தங்களது ஆற்றலை இழந்து விடும்படி செய்யாதே. மக்களுக்கு வழிகாட்டி அறிவூட்டு; ஆனால், ஒன்றைத் தாமாகத் துவக்கி நடத்தும் ஆற்றலும் கிரியா சக்தியும் குலையாதிருக்குமாறு பார்த்துக்கொள். மற்றவர்களிடமிருந்து பெறக்கூடியதை ஏற்றுக்கொள்; ஆனால் அதற்குப் பதிலாக, அவர்களது இயல்பின் முழுத் தெய்விகத்தையும் அவர்களுக்கு அளித்துவிடு. இதைச் செய்ய வல்லோனே தலைவனும் குருவும் ஆவான்.

இறைவன், உலகை ஒரு போர்க் களமாக்கி, அதில், போரிடுவோரின் காலடிச் சத்தங்களும், பெரும் போராட் டங்கள் மல்யுத்தங்கள் ஆகியவற்றின் பெரு முழக்கங்களும் நிறைந்திருக்கு மாறு செய்கிறான். அவன் நிர்ணயித் துள்ள விலையைக் கொடுக்காமல், அவ னுடைய அமைதியைக் களவு செய்து கொண்டு போகவா விரும்புகிறாய்?

பார்வைக்குப் பூரணமாயுள்ள ஒரு வெற்றியில் நம்பிக்கை வைக்காதே. ஆனால், வெற்றியடைந்த பின், இன்னும் செய்யவேண்டிய வேலைகள் பல உள்ளன எனக் காண்பாயாகில், மகிழ்ச்சியுடன் முன்னேறிச் செல். ஏனெனில், உண்மையான பூரணத்தை அடையுமுன், நீண்ட கால உழைப்பு இன்றியமையாததாகிறது. பாதையிலுள்ள ஓர் இடைநிலையைக் குறியாகக் கொள்ளுவதையோ, அஞ்சலிடத்தில் நீண்ட காலம் தங்குவதையோவிடப் பெருந் தவறு வேறொன்றுமில்லை.

எங்கு நீ மகத்தான ஒரு முடிவைக் காண்கிருயோ, அங்கு மகத்தானதோர் ஆரம்பமும் உண்டாகப் போகிறதென் பதை உறுதியாக நம்பு. ஒரு கோர மான, துன்பம் நிறைந்த அழிவு உன் மனத்தை அச்சுறுத்தும் போது, ஒரு பெரிய மகத்தான சிருஷ்டியும் நிச்சய மாக வரவிருக்கிறதென அதற்கு ஆறு தல் கொள். இறைவன், அமைதியான சிறு குரலில் மட்டுமன்றி, தீயிலும் புயல் காற்றிலும் உள்ளான்.

அழிவு எவ்வளவுக் கெவ்வளவு அதிகமா யிருக்குமோ, புதிதாகச் சிருஷ்டிப்பதற்குரிய சந்தர்ப்பங்களும் அவ்வளவு தாராளமாகவே இருக்கும். ஆனால், அழிவு பெரும்பாலும் கொடுமையாகவும், நீண்ட காலமாக மெல்ல மெல்ல நடைபெறுவதாகவும் இருக்கும். சிருஷ்டி தாமதமாகவே உண்டாகும்; அதன் வெற்றியும் தடைப்பட்டே வரும். இரவு மீண்டும் மீண்டும் வரும். ஆனால் பகல் சுணங்கும், அல்லது பொய் விடிவாகவுங்கூடத் தோன்றும். ஆயினும், மனம் தளராமல் காத்திருந்து பணியாற்று. உக்கிரமாக நம்புவோர் விரைவில் மனத்தளர்ச்சி யடைவர். ஆகவே நம்பிக்கையும் வேண்டாம், பீதியும் வேண்டாம். ஆனால், இறைவனது திருவுள்ளக் கருத்தையும், நிறைவேற்ற வேண்டுமென்னும் உனது திடசித்தத்தையும் பற்றி மட்டும் நிச்சயமாக இரு.

தெய்விகக் கலைஞன், தனது மேதை யையும் சாதனங்களையும் பற்றி நிச்சய மாக இராதது போலவே பெரும்பாலும் வேலை செய்வான். ஒன்றை எடுத்துச் சோதித்துப் பின்னர் விட்டுவிடுவான். அதைப் பொறுக்கி எடுத்து, எறிந்து விட்டு, பின்னர் அதை மீண்டும் எடுத் துத் தன் உழைப்பை யெல்லாம் அதில் செலுத்துவான். அதில் தவறி, பின்னும் அதை ஒட்டுப் போடுவான். அவன் செய் வதெல்லாம் இவ்விதமாகவே காணப் படும். எல்லாப் பொருள்களும் ஆயத்த மாகு முன், அவனது பணியில் பல ஆச்சரியங்களும் ஆசாபங்கங்களும் இயற் கையாக ஏற்படும். தேர்ந்தெடுக்கப்பட்ட பொருள் நிஷித்தம் என்னும் படுகுழி யில் எறியப்படும். தள்ளப்பட்ட பொருள் ஒரு மகத்தான கட்டிட அமைப்புக்கு மூலைக்கல்லாகும். ஆயினும், இவைகளுக் கெல்லாம் பின்னல், நமது பகுத்தறி வுக்கு அப்பாற்பட்ட ஓர் அறிவின் பிச காத பார்வையும், அளப்பரிய ஆற்ற லின் குறுநகையும் உள்ளன.

இறைவன் முன்பு காலம் அனைத்தும் உள்ளது. ஆகவே, அவன் எப்போதும் அவசரப்படத் தேவையில்லை. அவன் தனது குறியையும் வெற்றியையும் பற்றி நிச்சயமாக இருக்கிறான். தன் பணியைப் பூரணப் படுத்துவதன் பொருட்டு அதை நூறு தடவைகள் உடைத்தெறிவதற்கும் தயங்கான். பொறுமையே நாம் முதன் முதலாகக் கற்கவேண்டிய பாடம். ஆனால், அது, பயங்கொள்ளிகள், நாத்திகர், சோர்வுற்றவர், மந்த குணமுடையவர், பேராசையற்றவர், பலவீனர் ஆகியோரின் சோம்பலும் ஆலசியமும் வாய்ந்த இயக்கமாகாது. அமைதியும், பெருகிவரும் சக்தியும் நிறைந்த பொறுமையே அது. அது, விரைவாகவும் பலமாகவும் தாக்குவதற் குரிய ஒரு காலத்தை எதிர் நோக்கித் தன்னை ஆயத்தப்படுத்திக் கொள்ளுகிறது. அத் தாக்குகள் சொற்பமாகவே இருப்பினும், விதியை அடியோடு மாற்றக்கூடியவையாக இருக்கும்.

ஏதற்காக, இறைவன் தான் படைத்த உலகையே இவ்வளவு பயங்கரமாக அறைந்தும், காலின் கீழே போட்டு மிதித்தும், குருதி வெள்ளத்தில் குளிப்பாட்டியும், உலைக்களத்தில் நரகத் தீயை யொத்த செந்தழலில் எரித்தும் வதைக்கிறான்? ஏனெனில், மக்களினம், மொத்தத்தில், இன்னும் மண்ணோடு கலந்த உலோகத்தைப் போன்று கடினமாயும் பண்படாமலும் இருக்கிறது. எவ்விதம், அவ் வுலோகத்தைப் பண்படுத்த அதை உலைக்களத்தில் காய்ச்சி, உருக்கி, அடித்து உருப்படுத்துவது இன்றியமையாததோ, அவ்விதமாகவே மக்களினத்தைப் பண்படுத்துவதற்கும் இறைவன் கையாளும் மேலே குறித்த வழியைத் தவிர வேறு யாதொரு வழியுமில்லை.

இறைவனுடைய சாதனம் எவ்வித மாக இருக்கின்றதோ, அவ்விதமாகவே அவனுடைய முறையும் அமைந்திருக் கின்றது. மக்களினம் மட்டும் தன்னை விழுமிய தூய்மையான உலோகம்போல உருமாற்றிக் கொள்ளுவதற்கு இணங்கி அதற்கு உதவியாக நிற்குமாயின், அதன் விஷயமாக அவன் கையாளும் முறைகள் மிருதுவாகவும் இனிமையாக வும் இருக்கும். மேலும், அது மிகச் சிறந்த விழுமிய காரியங்களுக்கும் பயன் படும்.

இறைவன், தான் தேர்ந்தெடுப்பதற்கு உரித்தான அளப்பரிய சாதனங்கள் எத்தனையோ இருந்தும், இத்தகைய சாதனத்தைத் தேர்ந்தெடுத்துச் சிருஷ்டித்தது ஏன்? ஏனெனில், அவன் தனது தெய்விக பாவத்தில் அழகு, இனிமை, தூய்மை ஆகியவற்றுடன் வலிமை, திடநெஞ்சம், பெருமை ஆகியவற்றையும் கண்டான். வலிமையை அலட்சியம் செய்யாதே. அதன் அம்சங்களில் சில விரூபமா யிருப்பதால், அதை வெறுக்காதே. அன்பு ஒன்றே சிவம் என எண்ணாதே. சம்பூரணமடைந்த பூரணம் எல்லாவற்றிலும், வீரன், அரக்கன் ஆகியவர்களின் அம்சங்களும் சிறிதளவு கலந்திருப்பது அவசியமாகும். ஆனால், மகத்தான கஷ்டத்தினின்றே மகத்தான சக்தியும் உண்டாகின்றது.

மனிதன் மட்டும் ஞான ஒளி பெறச் சம்மதிப்பானுயின், யாவும் மாறுதலடையும். ஆனல், அவனுடைய மனம், உயிர், உடல் ஆகியவற்றின் இயல்புகள் இறைவனின் உயர் விதியை எதிர்த்து நிற்கின்றன. மனிதன் தன் அபக்குவங்களின் மீது மோகங்கொள்ளுகிருன்.

சித்தே நமது ஜீவனின் உண்மை. அபக்குவ நிலையிலுள்ள மனம், உயிர், உடல் அச் சித்தை மறைக்கும் திரைகளே. அவை பரிபக்குவமடைந்து சித்தின் வார்ப்புகள் ஆகவேண்டும். ஆத்ம ஞானம் அடைந்துவிட்டால் மட்டும் போதாது; அது சில ஜீவர்களை விண்ணுலகிற்கு ஆயத்தப்படுத்துகிறதாயினும், இம்மண்ணுலகை அநேகமாக முன்னிருந்த இடத்திலேயே விட்டுவிடுகின்றது. சமரசம் மட்டுமே விமோசனத்திற்கு வழியாகாது.

உலகம் மூவிதமான புரட்சிகளை அறியும். பொருளாதாரப் புரட்சியினால் சக்திவாய்ந்த பலன்கள் ஏற்பட்டுள்ளன. ஒழுக்கம், அறிவு ஆகியவை சம்பந்த மான புரட்சிகள், எல்லையற்ற பரப்பும் வளம் பொருந்திய பலன்களும்கொண்டு இலங்குகின்றன. ஆனால், ஆத்மிகப் புரட்சிகளே மகத்தான விதைப்புக்கள் ஆகும். மூவிதமான மாறுதல்களும் ஒன்றோடொன்று முற்றிலும் பொருந்தி இசைந்து நிற்குமாயின், பழுதற்ற பணி செய்ய முடியும். ஆனால், மக்களின் மனதும் உடலும் சக்தி வாய்ந்ததோர் ஆத்மிகப் பெருக்கைச் சரியாகப் பரித்துத் தாங்க முடியாம லிருக்கின்றன. ஆகவே, அதன் பெரும் பகுதி சிதறியும், மிஞ்சியது சீர்கெட்டும் விடுகின்றது. விஸ்தாரமானதோர் ஆத்மிக விதைப்பிலிருந்து ஒரு சிறு பலனேனும் ஏற்படவேண்டுமாயின், நமது மனம் உடலாகிய நிலத்தைப் பல தடவைகள் கிளைத்து உழுது பண்படுத்து வது இன்றியமையாததாகும்.

ஒவ்வொரு சமயமும் மக்களினத்திற்கு உதவி புரிந்துள்ளது. பல தெய்வங்களை வணங்கும் சமயமானது, மனிதனிடம் அழகின் ஒளியைப் பெருக்கியும், அவனது வாழ்க்கையை விலாசமும் விழுப்பமுங்கொண்ட பூரணத்தை அடையவேண்டுமென்னும் குறிக்கோளை விரிவுபடுத்தியும் உள்ளது.

கிறிஸ்தவ சமயமானது, தெய்வ அன்பு, கருணை ஆகியவற்றின் காட்சியை ஒரு சிறிது அவனுக்கு அளித்துள்ளது. புத்த சமயமானது, அறிவு, தயை, தூய்மை ஆகியவற்றை அடைவதற்குரிய விழுமிய பாதையை அவனுக்குக் காட்டியுள்ளது. யூத சமயமும் இஸ்லாமிய சமயமும், சமய நம்பிக்கையைச் செயலில் காட்டும் வழியையும், இறைவனுக்குத் தீவிர பக்தி செலுத்தும் முறையையும் காட்டியுள்ளன. இந்து சமயம், மிக மிக விரிவான, ஆழ்ந்த ஆத்மானுபவங்களின் மூலமாக எவற்றையெல்லாம் அடைய முடியுமோ, அவை யாவற்றிற்கும் உரிய வழிகளை மனிதனுக்குத் திறந்து விட்டுள்ளது. இறைவன் காட்சியை அளிக்கும் இவை யாவும், ஒன்றையொன்று தழுவி, ஒன்றிலொன்று கலந்துவிடக்கூடுமாயின், ஒரு மகத்தான காரியம் சாதிக்கப்படலாகும். ஆனால், மனத்தினால் அமைந்த கோட்பாடுகளும், தனது முறையொன்றே சிறந்ததெனச் செருக்குறும் தனி வழிபாடுகளும் குறுக்கே நிற்கின்றன.

எல்லாச் சமயங்களும் ஒரு சில ஆன் மாக்களை ஈடேற்றியுள்ளன. ஆனல், எச்சமயமும், இதுவரையில், மக்களின் வாழ்க்கையைச் சின்மயமாக்க முடிய வில்லை. அக்காரியத்திற்கு ஒரு குறித்த சமய வழிபாடோ கோட்பாடோ தேவை யில்லை. ஆனல், ஆத்மஞான வழியில் ஜீவன் பரிணும மடைவதற்கு, நீடித்த, எல்லாவற்றையும் தழுவும் ஒரு முயற்சி வேண்டற்பாலது.

உலகில் இன்று நாம் காணும் மாறுதல்கள், தம் குறியிலும் கருத்திலும், அறிவு, ஒழுக்கம், உடல் ஆகியவற்றுடன் தொடர்புடையனவாகவே உள்ளன. ஆத்மிகப் புரட்சியானது, தனது தருணத்தை எதிர்பார்த்துக்கொண்டு, இடையே, இங்கு மங்கும் தன் அலைகளை வீசி எறிந்து வருகின்றது. அப்புரட்சி நடைபெறும் வரையில், இதர புரட்சிகளின் உட்பொருளைத் தெளிந்தறிய இயலாது. அதுவரையில், இப்போது நடைபெறும் நிகழ்ச்சிகளின் வியாக்கியானமும், மனிதனின் வருங்கால நிலைமையின் முன்னுணர்ச்சியும் வீணே. ஏனெனில், அதன் இயல்பும், வலிமையும், நிகழ்ச்சியுமே மக்களினத்தின் அடுத்த யுகத்தை நிர்ணயிக்கும்.

## பொருள் விளக்கம்

1. அந்தர் ஞானம் - உள் அறிவு. இது மன முயற்சியினல் வருவதன்று. உள்ளத்தில் சுயமாகத் தோன்றும் அறிவாகும்.

2. அசத்தியாபாசம் - (Paradox), தோற்றத்திற்கு முறைத் தவருகவும், ஆனல் ஆய்ந்து நோக்கின் உண்மையாகவும் இருப்பது.

